# இலங்கையில் ஏற்பட்டுள்ளது அரசியல் மாற்றமல்ல..

## நேர்காணல்கள்



அ.தமிழ்ச்செல்வன்

பதிவிறக்கம் செய்ய - http://FreeTamilEbooks.com/ebooks/ilangaiyul_yerpatulathu_arasiyal_maatramalla}

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com
அட்டைப்படம்: B.மீனா - meenabalasundaram@gmail.com
மின்னூலாக்கம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com
மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

Ebook Publisher: http://freetamilebooks.com
Cover Image: B.Meena - meenabalasundaram@gmail.com
Ebook Creation: Lenin Gurusamy - guruleninn@gmail.com
Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

பதிவிறக்கம் செய்ய - http://freetamilebooks.com/ebooks/ilangaiyul_yerpatulathu_arasiyal_maatramalla

This Book was produced using LaTeX + Pandoc

# நூல் அறிமுக உரை…

இந்நூல் வெவ்வேறு துறைகளில் ஆளுமைமிக்க மூன்று பேரின் அனுபவங்களின் நேர்காணல்கள்.மேலும் 2 கட்டுரைகளும் கொண்ட தொகுப்பு.

முதலாமவர்- ஓவியர் புகழேந்தி - தன் தூரிகைகளால் சமகால சமூக பிரச்சனைகளை வெளிப்படுத்துவபவர்.ஓவியங்களை பொதுவெளியில் பொதுமக்களிடன் கொண்டு சேர்பவர். . பெரும்பாலான ஓவியர்கள் தங்கள் படைப்புகளை ஆர்ட் கேலரிகளுக்கு உள்ளே வைத்து அழகு பார்ப்பார்கள். ஆனால், இதிலிருந்து முற்றிலும் மாறுபட்டவர் சென்னை ஓவியக் கல்லூரி பேராசிரியர் புகழேந்தி.

இராண்டமவர் - எழுத்தாளர் முத்துக்கிருஷ்ணன்.மதுரை அருகேயுள்ள திருநகரை சேர்ந்தவர்.கள செயல்பாட்டாளர். உயிர்மை உள்ளிட்ட பல இலக்கிய நூல்களின் கட்டுரையாளர். “பசுமைநடை”- என்ற அமைப்பை உருவாக்கி மதுரையை சுற்றியுள்ள வரலாற்று சிறப்புமிக்க இடங்களை பற்றிய இடங்களை பற்றி தகவல்களை பொதுமக்களிடம் கொண்டு சேர்த்தவர். பசுமை நடை 100 வது நடையை முடித்திருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

மூன்றாமவர் -மதுரை - திருமங்கலத்தை சேர்ந்த ஓய்வுபெற்ற முதுகலைத் தமிழாசிரியர் மலர்க்கொடி அவர்கள் “சமூகவியல் நோக்கில் மணிமேகலை” என்ற தலைப்பில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றுள்ளார். சமூகவியல் சிந்தனைகள், அரசியல், குடும்பம், பரத்தமை,பொருளாதாரம்,கல்வி,சமயம் என ஏழு தலைப்பின் கீழ் தனது ஆய்வை மிக நுட்பமாகவும்,எளிமையாகவும் செய்திருக்கிறார். தனது முனைவர் பட்ட படைப்புகளை 256 பக்கங்கள் கொண்ட நூலாக உருவாக்கியிருக்கிறார்.

நான்காவதாக கட்டுரை ஒன்றையும் இனைத்துள்ளேன்.மூன்று நேர்காணல்களும் வரலாற்று தொடர்புடையதாக இருப்பாதலா,எனது கட்டுரையான "உலகின் முதல் பேரரசனும்

விசித்திர சட்டங்களும்..."- என்ற வரலாற்று கட்டுரையை இனைத்துள்ளேன்.

ஐந்தாவதாக- தமிழ் சினிமாவின் 100 ஆண்டு நிகழ்வுக்காக நான் எழுதிய “பட்டாணிச்செடியும்... இந்திய சினிமாவின் பயணப்பாதையும்...”- என்ற கட்டுரையும் உள்ளது.தமிழ்சினிமாவின் 100 ஆண்டு கால வரலாறு பட்டாணிச்செடியிலிருந்து எப்படி துவங்கி தற்போது வரையான நிகழ்வுகளை சுருக்கமாக சொல்லும் கட்டுரை.

மாறுபட்ட ஆளுமைகளை அவரின் துறை சார்ந்து எடுக்கப்பட்ட நேர்காணல்களை தொகுப்பு இந்நூல்.

# நூல் ஆசிரியர் அறிமுக உரை....



நான் தமிழ்ச்செல்வன்.மதுரை மாவட்டம் திருமங்கலத்தை சேர்ந்தவன். 12 ஆண்டுகளுக்கும் மேலாக பத்திரிக்கையாளனான நாளிதழ் ஒன்றில் துணைஆசிரியராக பணியாற்றிவருகிறேன். மேலும் திண்டுக்கல் மாவட்டம் வத்தலக்குண்டுவிலிருந்து கடந்த 24 ஆண்டுகளாக வெளிவரும் மகாகவி மாத இதழில் இணை ஆசிரியராக உள்ளேன். சிற்றிதழ்கள், இணைய இதழ்கள்,நாளிதழ்களில் கட்டுரை ,கவிதை,நேர்காணல் எழுதி வருகிறேன்.அந்த வகையில் 4 தமிழ் மீடியா இணைய இதழ், மகாகவி மாத இதழ், தமிழ் வாசல் மாத இதழில் வெளிவந்த எனது நேர்காணல்களின தொகுப்புகள் இந்த மினநூலில் இடம் பெற்றுள்ளன.ஓவியர், எழுத்தாளர்,பேராசிரியர் என வேவ்வேறு ஆளுமைகளின் நேர்காணல் பல புதிய தகவல்களை படிக்கின்ற வாசகர்களுக்கு கொண்டு சேர்க்கும் என நம்புகிறேன்.

என்னை எழுத துண்டுகிற எனது நண்பரும் , மகாகவி மாத இதழின் ஆசிரியருமான வதிலை பிரபா அவர்களுக்கும். எனது எழுத்துபணிக்கு உறுதுணையாக இருக்கும் நண்பர்கள், குடும்பத்தினருக்கும் இந்நூல் சமர்பணம்.

# இலங்கையில் ஏற்பட்டுள்ளது அரசியல் மாற்றமல்ல..

**நேர்காணல் : அ. தமிழ்ச்செல்வன், பொறுப்பாசிரியர், மகாகவி**

பிப்ரவரி, 2014



ஓவியனுக்கும், பார்வையாளனுக்குமான தொடர்பு என்பது மாத, வார இதழ்களில் இலக்கிய படைப்புகளுக்கு நடுவே வருகின்ற சில ஓவியங்களே. பெரும்பாலான ஓவியர்கள் தங்கள் படைப்புகளை ஆர்ட் கேலரிகளுக்கு உள்ளே வைத்து அழகு பார்ப்பார்கள். ஆனால், இதிலிருந்து முற்றிலும் மாறுபட்டவர் சென்னை ஓவியக் கல்லூரி பேராசிரியர் புகழேந்தி. இனப் படுகொலைகள், சாதி, மத ரீதியான வன்முறைகள், இயற்கைப் பேரழிவுகள் குறிப்பாக ஈழப்போராட்டம், பாலஸ்தீன விடுதலை, தென்னாப்பிரிக்க விடுதலைப் போராட்டம் போன்ற சமூக நிகழ்வுகளை, மக்கள் பிரச்னைகளை மையமாகக் கொண்ட ஓவியங்களை தனது ஓவியப் படைப்புகளில் கொண்டு வருபவர். ஓவியர் புகழேந்தியின் மற்றொரு தனிச்சிறப்பு மக்கள் பிரச்சனை பேசுகின்ற அவரின் ஓவியங்களை மக்கள் அதிகமாகக் கூடுகிற இடங்களில் கண்காட்சியாக வைப்பது தான். தமிழக அரசின் விருது உட்பட பல்வேறு விருதுகளைப் பெற்றிருக்கும் இவர் மலேசியா, சிங்கப்பூர், அமெரிக்கா, கனடா, பிரான்ஸ், பிரிட்டன், ஜெர்மனி, இலங்கை போன்ற நாடுகளில் ஓவியக் கண்காட்சிகளை நிகழ்த்தி இருக்கிறார். நமது “மகாகவி” இதழுக்காக ஓவியர் புகழேந்தி அளித்த நேர்காணல் இது...

**இலக்கிய படைப்புகளைப் போல் ஓவியத்தால் கருத்துக்களை வாசகன் மனதில் பதிய வைப்பது சாத்தியமா ?**



இலக்கியப் படைப்புகளுக்கு ஏதோ ஒரு மொழி தேவைப்படுகிறது. அதைப் படைப்பதற்கும் அல்லது வாசிப்பதற்கும். ஆனால், ஓவியப் படைப்பு என்பது உலகப் பொதுமொழி. மொழி எல்லைகளைக் கடந்து, பரந்து விரிந்து அனைத்து மொழி பேசுகின்ற மக்களிடத்திலும் மிக எளிதாகச் சென்றடையும். ஓவியம் ஒரு காட்சி மொழி என்பதால், இலக்கிய படைப்புகளால் ஏற்படுத்த முடியாத தாக்கத்தை ஓவியத்தால் ஏற்படுத்த முடியும். "ஆயிரம் புத்தகங்களில் பதிவு செய்யப்படும் கருத்தை ஒரு ஓவியத்தில் பதிவு செய்துவிடலாம்" என்று கன்னட கவிஞர் சித்தலிங்கையா, என்னுடைய ஓவியக் கண்காட்சியில் பதிவு செய்தார். இதுபோல், பலரும் பதிவு செய்திருக்கிறார்கள். எனவே, இலக்கியப் படைப்புகளைப் போல் மட்டும் அல்ல, கூடுதலாகவே தாக்கத்தை ஏற்படுத்த முடியும்.

**ஓவியங்களில் கருப்பு, வெள்ளை மற்றும் வண்ணம் இதில் எது கருத்துக்களை தீவிரமாக வெளிப்படுத்தும் ?**

கருத்துக்களை வெளிப்படுத்துவதற்கு இரண்டுமே சிறந்தது தான். ஆனால், வண்ணத்தில் செய்வதை விட கருப்பு வெள்ளையில் செய்வது கடினம். கருப்பு வெள்ளையில் ஒரு ஓவியத்தை உருவாக்குவதற்கு சரியான புரிதல் வேண்டும். சரியான புரிதலோடு கருப்பு வெள்ளையில் ஒரு ஓவியத்தைச் செய்ய முடிந்தால்,

வண்ணங்களில் செய்வது மிக எளிதாகி விடும். கருப்பு வெள்ளை, வண்ணங்களை விட ஆழத்தை (depth ) கொடுக்கும்.

**தமிழகத்தின் ஓவிய வரலாறு குறித்து...**



சங்க இலக்கியங்களிலேயே ஓவியங்கள் குறித்த குறிப்பு காணக் கிடைக்கிறது. விழுப்புரம், புதுக்கோட்டை, மதுரை மற்றும் கோவை மாவட்டங்களில் பாறை ஓவியங்கள் காணப்படுகின்றன. இதுபோன்ற ஓவியங்கள் தான் வரலாற்றுக்கு முந்தைய ஓவியங்கள் (pre historic paintings) என்று வரலாற்று ஆய்வாளர்களால் அழைக்கப்படுகிறது. மனிதன் ஒரு மொழியை பேசுவதற்கு முன்பு, ஓவியம் வழி தான் உரையாடியிருக்கிறான் என்பது விளங்கும். அப்படிப்பட்ட தொன்மையான வரலாற்றில் தொடங்கும் தமிழக ஓவிய வரலாறு, அடுத்து சுவர் ஓவியங்கள் என்ற வளர்ச்சி நிலையை, சித்தண்ணவாசல், தஞ்சை பெரிய கோவில்

போன்ற இடங்களில் பார்க்கலாம். மிக அருமையான செய் நேர்த்தியுடன் கூடிய Fresco முறையில் செய்யப்பட்ட சுவர் ஓவியங்கள் (Mural Painting) இன்றும் முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருக்கின்றன. அதைத் தொடர்ந்து, தமிழகத்தின் பல இடங்களில் உள்ள கோவில்களில் Tempra முறையில் செய்யப்பட்ட சுவர் ஓவியங்களைக் காண்கிறோம். பல கோவில்களில் உள்ள ஓவியங்கள் 300 ஆண்டுகளுக்கு மேற்பட்ட வரலாறு உள்ளவையாக விளங்குகின்றன. சமீப காலங்களில் அவை மெல்ல மெல்ல அழிவு நிலையை அடைகின்ற காரணத்தால், அதனுடைய முக்கியத்துவத்தை அறியாத அறங்காவலர்களும், அதிகாரிகளும் அதை அழித்துவிட்டு, தற்கால வண்ணங்களைக் கொண்டும், ஏதும் அறியாத ஓவியர்களைக் கொண்டும் செய்து இருப்பதாக அறிகிறோம். சில கோவில்களில் சோழர் காலத்திலும், சில கோவில்களில் நாயக்கர் காலங்களிலும் செய்யப்பட்ட ஓவியங்களாக இருக்கின்றன. அதே காலகட்டங்களில் செய்யப்பட்ட சிற்பங்களையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

அதற்கு அடுத்த நிலையில், ஆங்கிலேயர் வருகைக்குப் பிறகு, அய்ரோப்பிய பாணி பயிற்சியும், அதைத் தொடர்ந்து அம்முறையிலான வெளிப்படுத்தலும் ஆரம்பமாகிறது. ஆங்கிலேயர்களால் தொடங்கப்பட்ட முதல் கலைப்பள்ளி சென்னை கலைப்பள்ளி தான். இங்குதான் நவீன வரலாறு தொடங்குகிறது. தொன்மையில் தொடங்குகின்ற தமிழக ஓவிய வரலாறு நவீனமாக நீட்சியடைகிறது. நீண்ட வரலாறாகத் தொடர்கிறது.

**சமூக மாற்றத்திற்கு ஒரு ஓவியன் என்ன மாதிரியான பங்களிப்பை செய்ய முடியும் ?**



ஒரு ஓவியன் என்பவன், முதலில் ஒரு மனிதன். தான் வாழ்கின்ற சமூகத்தில் நிலவும் அனைத்து வகையான நிகழ்வுகளுக்கும் முகம் கொடுக்க வேண்டியிருக்கிறது. துன்பங்கள், துயரங்கள், மகிழ்ச்சிகள், சுரண்டல்கள், அடக்குமுறைகள் என்று தொடரும் நிகழ்வுகளில் பல நேரங்களில் அவனும் அகப்பட்டுக்கொள்கிறான். அவ்வாறு இல்லாவிடினும், அதன் தாக்கத்திற்கு உள்ளாக வேண்டியிருக்கிறது. அதற்கும் நமக்கும் சம்மந்தம் இல்லை என்று இல்லாமல், ஒரு மனிதனாக உள்வாங்கியவைகளை, ஒரு படைப்பாளனாக, ஓவியனாக, வெளிப்படுத்தி, மக்களிடத்தில் கொண்டு சென்று, விழிப்புணர்வை ஏற்படுத்தி அவர்களை போராட்டத்திற்கு தயார் படுத்துகின்ற பணியைச் செய்யமுடியும். செய்ய வேண்டும்: அதோடு நில்லாமல் ஒரு சமூகத்தை வழி நடத்துகின்ற பொறுப்பும், பண்படுத்துகின்ற பொறுப்பும் கலைஞர்களுக்கு உண்டு. போராட்ட களங்களிலும் நின்று மக்கள் போராட்டங்களை முன்னெடுப்பதற்கும் பங்களிக்க முடியும். ஒரு அரசியல் கட்சியை விட, இயக்கங்களை விட கூடுதல் பொறுப்பும், அக்கறையும், கலைஞர்களுக்கு உண்டு என்பதை உணர வேண்டும்.

**தற்போது இலங்கையில் ஏற்பட்டுள்ள அரசியல் மாற்றங்களுக்குப் பின்பும் தனி ஈழம் சாத்தியம் தானா ?**



இலங்கையில் ஏற்பட்டுள்ளது அரசியல் மாற்றமல்ல. தமிழர்களுக்கு மிகப்பெரிய பின்னடைவு. எப்போதும் இல்லாத அளவிற்கு பின்னடைவைச் சந்தித்திருக்கிறோம். ஆனால், எப்போதும் இல்லாத அளவிற்கு தமிழீழத் தமிழர்களின் போராட்டம் உலக அளவில் சென்றிருக்கிறது. புலிகள், ஒரு தனி நாட்டைக் கட்டமைத்து, அனைத்து நிர்வாகக் கட்டமைப்புகளோடு தனி அரசை, தமிழீழ அரசை நடத்திக் கொண்டிருந்த போது கிடைக்காத உலக அங்கீகாரம், விடுதலைப்புலிகள் பல இராணுவ ரீதியான வெற்றிகளைப் பெற்றபோது கிடைக்காத உலக அங்கீகாரம் இப்போது தமிழர்களின் போராட்டத்திற்கு கிடைத்திருக்கிறது. என்ன! அதிகமான இழப்புகளைச் சந்தித்து விட்டோம். ஈடு செய்ய முடியாத இழப்புகள் அவை.

இன்னும் தமிழர் பகுதிகளில் இராணுவ ஆக்கிரமிப்பு தொடர்கிறது. எவ்வித சுதந்திரமும் இல்லாமல், இருக்க இடமில்லாமல், உண்ண உணவில்லாமல் தமிழர்கள் சிரமப்படுகிறார்கள் என்பது ஒரு புறம், தமிழர்கள் பகுதியில் சிங்களக் குடியேற்றங்களை செய்து சிங்களப்பகுதியாக மாற்றுவதும், தமிழ் ஊர் பெயர்களை சிங்களப் பெயர்களாக மாற்றி சிங்களமயப்படுத்துவதும் தீவிரமாகத் தொடர்கிறது.

இலங்கையில், தமிழர்கள் சிங்களவர்களுக்கிடையில் உள்ள பிரச்னை என்பது இலங்கை சுதந்திரம் பெற்ற அன்றிலிருந்து தொடர்கின்ற பிரச்னை. 60 ஆண்டு கால ஆயுதப் போராட்டம். இந்த 60 ஆண்டு கால போராட்டம், ஒன்றை தெளிவாக

உணர்த்துகிறது. தமிழர்களும், சிங்களவர்களும் இனிமேல் சேர்ந்து வாழமுடியாது என்பதை.

இந்நிலையில் தான், 2009 மே மாத, முள்ளிவாய்க்காலில் சிங்கள பேரினவாதம் உலக வல்லாதிக்க நாடுகளின் துணையோடு தமிழரின் உரிமைப் போராட்டத்தை நசுக்கி, இலட்சக்கணக்கான தமிழர்களைக் கொன்று, இன அழிப்பைச் செய்திருக்கிறது. சிங்கள பேரினவாத அரசு, இன அழிப்பு செய்ததோடு, போர்க்குற்றமும் செய்திருக்கிறது என்பதை தொடர்ந்து வரும் சாட்சியங்கள் நிரூபிக்கின்றன.

தமிழர்கள் பூர்வகுடிகள். தமிழீழப் பகுதியான வடக்கு கிழக்கு மாகாணங்களை தாயகமாகக் கொண்டவர்கள். அவர்களுக்கான உரிமை அங்கு தொடர்ந்து மறுக்கப்படுகிறது. அதனால் தான் 60 ஆண்டுகளாக போராட்டம் தொடர்ந்தது. ஆயுதங்கள் “மௌனிக்க”ப்பட்டதை வைத்து போராட்டம் முடிவுக்கு வந்துவிட்டதாக சிங்களமும் கருதிவிடக் கூடாது, உலகமும் கருதிவிடக் கூடாது. உலகில் விடுதலைப் போராட்டங்கள் 300 ஆண்டுகளைக் கடந்தும் நடைபெற்றிருக்கின்றன.

ஒரு நோய்க்கு சரியான மருந்து கொடுக்கப்பட்டால் தான் அந்த நோயை குணப்படுத்த முடியும். அதுபோல் ஒரு பிரச்னைக்கு, சரியான தீர்வு தான், மருந்தாக இருக்க முடியும். தமிழர்-சிங்களவர் பிரச்சினைக்கு தீர்வு “தமீழீழம்” மட்டுமே. அது இல்லாதவரை பிரச்னை இருக்கும். பிரச்னை இருக்கும் வரை போராட்டமும் தொடரும் என்பதோடு, தமிழர்கள் மீதான சிங்கள பேரினவாத அரசின் தொடர்ந்த அடக்குமுறையும், அங்கு தமிழினத்தை அழித்தொழிக்கும் முயற்சியும், தமிழிர் பகுதிகளை கபளீகரம் செய்கின்ற போக்கும், தமிழர் பகுதிகளில் இராணுவ மயப்படுத்தலும், பிரச்சினையை நீடிக்கச் செய்து, போராட்டத்தைத் தொடரச் செய்யுமே தவிர, முடக்கி விடாது. எனவே, உலக சமூகம் இதை உணர்ந்து, தமிழர் தரப்பு பக்கம் நின்று, ஆராய்ந்து, தமிழீழத்திற்கான பொது வாக்கெடுப்பை ஐக்கிய நாடுகள் சபையைக் கொண்டு தமிழர்களிடத்தில் நடத்தி பிரச்சினைக்கு தீர்வு காண வேண்டும். தமிழீழம் சாத்தியம் என்பது மட்டுமல்ல தமிழீழம் மட்டுமே தீர்வு.

சமீபத்தில் ஒரு நாளிதழுக்கு அளித்த பேட்டியில் இந்தியா பொருளாதார ரீதியாக உதவினால் போதும், அரசியல் ரீதியாக தலைவர்கள் தலையிட வேண்டாம் என்ற தொனியில் பேசியுள்ளாரே வடக்கு மாகாண முதல்வர் விக்னேஸ்வரன். அது குறித்து உங்கள் கருத்து என்ன ?

இது உள்வீட்டுப் பிரச்சினை, தமிழகத் தலைவர்கள் வேண்டாம் என்பது போல் செய்தி வந்தது. ஆனால், அவர் அதற்கு உடனே மறுப்பு தெரிவித்து விட்டார்.

அவ்வாறு கூறவில்லை என்றும், என் கருத்து திரிக்கப்பட்டிருக்கிறது என்றும் கூறியிருந்தார். அவர் நேர்காணலை வெளியிட்ட இதழ் குறித்தும் நமக்குத் தெரியும். எனவே, அது குறித்து விவாதம் தேவையில்லை என்றே கருதுகிறேன்.

**தமிழகத்தில் ஓவியம் குறித்த ஆர்வமும், புரிதலும் எப்படி இருக்கிறது?**

கடந்த 30 ஆண்டுகளாக ஓவியனாக இயங்கி வருகின்றேன். தமிழகத்தின் பல இடங்களில், சிறு நகரங்களில் கூட கண்காட்சி நடத்தியிருக்கின்றோம். சாதாரண மக்கள் கூட ஓவியங்களைப் பார்த்து, கருத்துக்களை பதிவு செய்திருக்கின்றார்கள். ஓவியங்களை மக்களிடமும் கொண்டு சென்றால் ஆர்வமுடன் வந்து பார்க்கிறார்கள். புரிதலிலும் எந்தச் சிக்கலும் இல்லை. ஆனால், ஓவியம் மக்களிடமிருந்து அன்னியப்பட்டு இருக்கிறது. மக்களுக்கும் ஓவியர்களுக்குமான இடைவெளி அதிகமாக உள்ளது. ஓவியங்களின் உள்ளடக்கம் மக்களுடையதாக இல்லை, உருவமும் மக்களுக்கானதாக இல்லை என்று மக்கள் கருதுகின்ற நிலையில், பல்வேறு முற்போக்கு சமூக இயக்கங்கள் துணையோடு நாம் மக்களிடம் நெருங்கியிருக்கின்றோம். மக்களுடைய பிரச்சினைகள் குறித்து, மக்கள் மொழியில் பேசினால், ஆர்வமுடன் பங்கேற்பதோடு புரிந்துகொண்டு எதிர்வினையாற்றவும் செய்கிறார்கள். தொடர்ச்சியான முயற்சிகளால் இன்னும் அதிகமான ஆர்வத்தையும், புரிதலையும் ஏற்படுத்த முடியும்.

**ஒரு உணர்வை, சம்பவத்தை இலக்கியப் படைப்பாக்குவதை விட ஓவியமாக்குவது எளிதா ?**



உணர்வு ஒன்று தான், மொழிதான் வேறு. இலக்கியப் படைப்பில் அந்த உணர்வைக் கொண்டு வருவதற்கு அந்த மொழியை இலாவகமாக பயன்படுத்தத் தெரிந்திருக்க வேண்டும். அதேபோல், அந்த உணர்வை ஓவியத்தில் வெளிப்படுத்த காட்சி மொழியை சரியாகப் பயன்படுத்தத் தெரிந்திருக்க வேண்டும். அவ்வளவுதான். அதனதன் வடிவத்தில் அதனதன் வேலையை அது செய்யும். படைப்பாளர்களைப் பொறுத்து மாறும் என்றாலும் வாசகர்களிடம், பார்வையாளர்களிடம் அதிக ஈர்ப்பைப் பெறுவது ஓவியம் தான்.

**ஒரு ஓவியனால் பொருளாதார ரீதியாக வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்திக் கொள்வது சாத்தியம் தானா ?**

தமிழகச் சூழலில், ஒரு ஓவியன் பொருளாதார ரீதியாக வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்திக் கொள்வது சாத்தியமில்லை. கலைப்படைப்புகளை வாங்கி சேகரிப்பது என்பது பழக்கம் இல்லாத ஒன்று. இல்லத்தில் ஓவியங்களை மாட்டி அழகுபடுத்துகின்ற பழக்கமில்லை. கேளிக்கைகளுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் செலவு செய்கின்ற வசதி படைத்த தமிழர்கள், ஒரு ஓவியனின் ஓவியத்தை வாங்குவதற்கு பணமிருந்தும், மனமில்லை. மேலை நாடுகளில், ஏன் இந்தியாவில் மும்பை, தில்லி, கல்கத்தா போன்ற நகரங்களில் உள்ளது போல், தமிழகத்தில் இல்லை. மேலை நாடுகளோடு ஒப்பிடும் போது இந்தியாவில் மிகவும் சிரமம். இந்தியாவின் பிற நகரங்களோடு ஒப்பிடும் போது தமிழகத்தில் மிக மிகச் சிரமம். இந்திய அளவிலேயே ஓவியத்தை மட்டுமே வைத்து தங்கள் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்திக் கொண்டவர்கள் மிகச் சிலரே.

**உங்கள் எதிர்காலத் திட்டம் என்ன ?**

மனித விடுதலையை நோக்கியே எனது பயணம். அது என் ஓவியமாக இருந்தாலும், என் எழுத்தாக இருந்தாலும், என் பேச்சாக இருந்தாலும் அதை நோக்கித்தான். என்னுடைய அனைத்துச் செயற்பாடுகளும் அதை நோக்கியே இருக்கும். செய்வதற்கு நிறைய இருக்கிறது. காலமும், சூழலும் அதைத் தீர்மானிக்கும்.

# ஜெருசலேம் நோக்கி தமிழ் எழுத்தாளரின் பயணம்...!

**10 APRIL 2012**

வருடத்தின் 365 நாட்களும் போர் நிகழ்ந்து கொண்டிருக்கிற இடம் என்றால் அது பாலஸ்தீனமாகத்தான் இருக்கும். குறிப்பாக கடந்த மார்ச் 10 ம் தேதி இஸ்ரேலிய போர் விமானங்கள்

காசாவின் பல்வேறு பகுதிளில் ஏவுகனைத்தாக்குதல் நடத்தின இதில் 10 பலியாகினர், 1964ம் ஆண்டு இஸ்ரேலின் நிலஆக்கிரமிப்புக்கு எதிராக நடைபெற்ற வேலைநிறுத்த போராட்டத்தில் உயிரிழந்தவர்களின் நினைவாக ஆண்டுதோறும் கைடைபிடிக்கப்படும் பாலஸ்தீனர்களின் பூமிதினமான மார்ச் 30 ஆன்று கூட, இஸ்ரேல் அதை சீர்குலைக்கும் நோக்கத்தோடு தாக்குதல் நடத்தியுள்ளது. இந்த தகவல் சமீபத்திய தகவல் மட்டுமே. தினந்தோறும் பாலஸ்தீனத்தை அனைத்து பக்கங்களிலும் முற்றுகையிட்டுள்ள இஸ்ரேல் நடத்தும் தாக்குதல் காரணமாக பாலஸ்தீனம் முடக்கப்பட்டுள்ளது.

இது போன்ற சூழலில் கடந்த 2010 டிசம்பரில் புதுடெல்லியிலிருந்து தரை வழியாக 10,000 கிமீ பயணமாக பாலஸ்தீனம் சென்று, அங்கிருக்கும் மக்களுக்கு நிவாரணப்பொருட்கள் வழங்கச் சென்ற ஆசிய பயணக்குழுவில் இடம் பெற்ற ஒரே தமிழர் எழுத்தாளர் அ.முத்துக்கிருஷ்ண்.

எழுத்தாளர் அ. முத்துக்கிருஷ்ணன் மதுரையை சேர்ந்தவர், தமிழ்ச்சூழலில் காத்திரமாக இயங்கி வருபவர். விளிம்புநிலை மக்கள், சிறுபான்மையினர், சுற்றுப்புறச்சூழல், உலகமயம், மனித உரிமைகள் என பல தலைப்புகளில் தொடர்ந்து எழுதியும் இயங்கியும் வருபவர். தன் எழுத்துக்களுக்காகத் தொடர்ந்து கடந்த

பத்தாண்டுகளாகப் பயணித்தும் வருபவர்.

இந்தியாவின் குஜராத், ஒரிசா, விதர்பா, ஜார்கண்டு, ஆந்திரம் என இந்தியாவெங்கும் களப்பணிக்காக மாதத்தின் பாதி நாட்கள் பயணத்தில் இருப்பவர். மிக அபூர்வமான பல தகவல்களைப் பார்வைகளைத் தமிழக வாசகர்களுக்கு வழங்கி வருபவர். தொடர்ந்து உயிர்மை, தலித் முரசு என பல இதழ்களில் எழுதியும் வருபவர், தன் எழுத்தின் ஒரு பகுதியாக முக்கிய படைப்புகளை தமிழுக்கு மொழியாக்கமும் செய்துள்ளார்.

குஜராத் இனப்படுகொலை குறித்த தெகல்கா ஆவணங்களை இந்திய மொழிகளில் முதலாவதாக தமிழல் நமக்கு வழங்கியவர். அத்துடன் அப்சலை தூக்கிலாடாதே, தோழர்களுடன் ஒரு பயணம் இவரது முக்கிய மொழியாக்க நூல்கள். ஒளிராத இந்தியா, மலத்தில் தோய்ந்த மானுடம் இவரது இரு கட்டுரை தொகுதிகள். சமீபத்தில் கூடங்குளம், முல்லைபெரியாறு குறித்தும் தனது பதிவுகளை படைப்புகளாக பதிவுகளாக பதிவுசெய்திருப்வர்.

கடந்த 2010 ல் சென்றது போலவே இந்த ஆண்டும் அதே குழுவினருடன் ஜெருசலேம் செல்கிறார். கடந்த மார்ச் இறுதிவாரத்தில் புறப்பட்ட முத்துகிருஷணன்,ஜோர்டான் தலைநகரம் அம்மான் சென்று,அங்கிருந்து ஜெருசலேம் செல்கிறார். அவரது பயணத்திற்கு முன்பாக தனது பயணம் குறித்து அளித்த பிரத்யேகமான சிறு நேர்காணல் இது



**2010ல் சென்று வந்த பாலஸ்தீன பயணம் குறித்து..?**

பாலஸ்தீனப் பயணம் முழுவதும் சாலை வழியாக சென்றாதால் பல கலாச்சாரங்களுடன் கை குலுக்கிச் செல்வது மிகவும் புதிய அனுபவத்தை தந்தது. ஒவ்வோரு நாளும் புதிய நிலப்பரப்பு, புதிய மக்கள், புதிய மொழி என நான் இதுவரை புத்தகங்களில், புகைப்படங்களில், திரைப்படங்களில் மட்டுமே பார்த்த படித்த விடயங்களை நேரில் அனுபவித்தது வியப்பான அனுபவமாக இருந்தது. பலவித முகங்கள், பாவனைகள், நிறங்கள், உடைகள், மொழிகள், உணவுகள் என இந்த பயணம் மனிதகுல நாகரீங்கள் தோன்றிய நிலங்களின் ஊடே பயணித்தது, எங்கள் அனைவருக்குமே பிரமிப்பை தந்தது.

பாலஸ்தீனத்தின் காசா பகுதி மக்கள் படும் துயரங்களை பார்த்தது என் வாழ்நாளில் மறக்க முடியாத காட்சிகளாக என்னுள் உறைந்தது.

**தற்போதைய பயணத்திற்கும், 2010 பயணத்திற்கும் என்ன வேறுபாடு?**




இந்த முறை அதே குழுவினருடன் பாலஸ்தீனத்தின் மறுமுனையான மேற்கு கரை நோக்கி செல்கிறேன். ஜோர்தன் நலைநகரம் அம்மாணில் இருந்து உலகின் பல பகுதிகளில் இருந்து வரும் செயல்பாட்டாளர்கள், பத்திரிக்கையாளர்கள் கூடி ஒரு மாபெரும் பேரணியாக ஜெருசலம் நோக்கி செல்லவிருக்கிறோம். மார்ச் 30 ஆம் தேதி நாங்கள் அம்மாணில் சங்கமிக்கிறோம்.

**தற்போதைய பயணத்தில் சந்திக்க இருக்கும் முக்கியஸ்தர்கள் யார் யார்?**




இந்த முறை இங்கிலாந்து முன்னால் பாராளுமன்ற உறுப்பினரும் விவா பாலஸ்தீனா நிறுவியவருமான ஜார்ஜ் காலவே, கவிஞர் இபராகிம் நசருல்லா, ஆர்ச் பிஷப் தெஸ்மந்த டுடு, டாக்டர் கார்னல் வெஸ்ட், காதா காரீமி, லெயிலா காலித என பல உலக முக்கியஸ்தர்களை சந்திக்கும் ஆவலுடன் இருக்கிறேன்.

**உங்கள் பயணங்கள் சாதித்தது என்ன?**




இந்த பயணத்திற்கு பின் இந்தியாவெங்கும் சென்று எங்கள் அனுபவ பகிர்வுகளை நடத்தினேம், தமிழகத்திலும் பல ஊர்களின் இந்த அனுபவங்களை பகிரும் அரங்குகள் ஏற்பாடு செய்யபட்டன. உலகம் முழுவதும் மக்கள் மீது நடக்கும் அடக்குமுறைகள் பற்றி மக்கள் அறிந்துகொள்ளும் ஆர்வத்துடன் இருந்தனர். பொதுவாகவே பிரதிகளை படித்து அறிந்துகொள்வதை விட ஒருவர் நேரில் பார்த்து வந்து விவரிக்கும் போது அந்த அனுபவம் என்பது வேறாகவே இருக்கிறது. இன்னும் அதிகப்படியான மக்களிடம் இந்த செய்திகளை கொண்டு சேர்க்கவேண்டும் என்பதே என் அவா.

**அரபு நாடுகளில் பயணித்தவர் என்ற முறையில் ஈரான்,அமெரிக்கா இடையே தற்போது ஏற்பட்டுள்ள போர்சூழல் முன்றாம் உலகப்போராக மாறும் என்கிறார்கள் உங்கள் கருத்து என்ன?**

மூன்றாம் உலக போராக அது மாற வாய்ப்பு இல்லை, ஈராணில் மட்டுமின்றி வளைகுடா நாடுகளில் அமெரிக்கா ஒருவித தொடர் பதற்றத்தை விதைத்த வண்ணம் உள்ளது. ஆப்கானிஸ்தான், ஈராக் தொடங்கி அவர்களது அடுத்து இலக்கு ஈராண் தான் என்பது அனைவரும் அறிந்ததே. ஈராக் என்கிற ஒரு தேசத்தை அதன் நாகரீகத்தை சிதைத்த பின்னும் அவர்களால் இது வரை பேரழிவு ஆயுதங்களை கண்டுபிடிக்க முடியவில்லை. அதே போல் தான் இப்பொழுதும்

ஈரான் மீது ஒரு தாக்குதல் தொடுக்க தக்க காரனங்களை தேடி அலைகிறது அமெரிக்கா.

**அரபுநாடுகள் என்றாலே தீவிரவாதிகள் உருவாக்கப்படுகிற நாடுகள் என்ற கருத்து உண்மைதானா?**



இந்த கருத்து அமெரிக்கா திட்டமிட்டு கடந்த 35 ஆண்டுகளாக உருவாக்கியதே, இது வளைகுடாவில் உள்ள எண்ணை வளங்களை தன் கட்டுபாட்டிற்குள் கொண்டு வர அவர்கள் போட்டு ஒரு நெடுங்திட்டமே. அமெரிக்காதான் முதலில் ரஷியாவை எதிர்த்த தனது போரில் ஒசாமாவை தயார் செய்தது. ஒசாமாவுக்கு கணக்கு இல்லாத டாலர் பணம், ஆயுதங்கள் கொடுத்தது, ஒசாமா பின் லாடன் ஒரு நாட்டு பிரதமர் போல் அமெரிக்கா சென்று அரச மரியாதையுடன் அந்த நாட்டையே வலம் வந்தார். அதன் பின்னர் அவர்களின் கட்டுப்பாடை விட்டு ஒசாமா வெளியேறிய கனம் தான் அவர் தீவிரவாதியாக மாற்றப்பட்டார். இன்றும் அமெரிக்காவின் அடியாளாக இருந்து கொண்டு நீங்கள் எந்த அட்டூழியங்கள் செய்தாலும் அதற்கு கைமாறாக உலக வங்கி கடனும் சகல மரியாதைகளும் கிடைக்கும், அப்படி நீங்கள் செய்ய மறுத்தால் நீங்கள் ஒரு தீவிரவாத நாடாக கருதப்படுவீர்கள்.

# பெண்ணுக்கு கற்பு வலியுறுத்தப்பட காரணம் என்ன?

இளமையும்,புதுமையும் குறையாமல் உயிர்போடு திகழ்கிறது நம் தமிழ்மொழி.உலகின் மூத்த மொழிகளுள் ஒன்று.பல ஆயிரம் ஆண்டுகள் கடந்தும் காலத்திற்கேற்ப தன்னை புதுபித்து கொண்டு வளர்ந்து வருகிறது. தமிழ்மொழியின் வளமை க்கு அதன் இலக்கண,இலக்கிய வளமையே அடிப்படை. அதிலும் குறிப்பாக அதன் இலக்கிய வளம் முக்கியமானது. தமிழ் இலக்கியங்கள் கற்பனை நயங்களும், பழந்தமிழர்களின் வாழ்க்கையும் பிண்ணிபிணைந்த படைப்புகள். உலகின் முதல்காப்பியமாக போற்றப்படுகிற சிலப்பதிகாரம் -மணிமேகலையும் படிக்கபடிக்க பழந்தமிழரின் வாழ்க்கையை நம் கண்முன் நிறுத்துபவை.

சிலப்பதிகாரத்தின் தொடர் காப்பியம் மணிமேகலை. மதுரை - திருமங்கலத்தை சேர்ந்த ஓய்வுபெற்ற முதுகலைத் தமிழாசிரியர் மலர்க்கொடி அவர்கள் “சமூகவியல் நோக்கில் மணிமேகலை” என்ற தலைப்பில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றுள்ளார். சமூகவியல் சிந்தனைகள், அரசியல், குடும்பம், பரத்தமை,பொருளாதாரம்,கல்வி,சமயம் என ஏழு தலைப்பின் கீழ் தனது ஆய்வை மிக நுட்பமாகவும்,எளிமையாகவும் செய்திருக்கிறார். தனது முனைவர் பட்ட படைப்புகளை 256 பக்கங்கள் கொண்ட நூலாக உருவாக்கியிருக்கிறார்.

ஆய்வு நூலை படிக்கபடிக்க ஏற்பட்ட சந்தேகங்கள், புதிய தகவல்களை தெரிந்து கொள்ள முனைவர் மலர்க்கொடி அவர்களை தமிழ்வாசல் வாசகர்களுக்காக நேர்காணல் செய்தேன். அவரது நேர்காணலில் கிடைத்த தகவல்கள் எப்படியெல்லாம் வாழ்த்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள் என்ற ஆச்சர்யத்தை ஏற்படுத்தியது....



**1. சிலப்பதிகாரம் -மணிமேகலை திட்டமிட்டு உருவாக்கப்பட்ட காப்பியமா?**

சிலப்பதிகாரம் -மணிமேகலை இரண்டு ஆகிய இரண்டும் இரட்டைக்காப்பியங்கள் என்று அழைக்கப்படுகின்றன.சிலப்பதிகாரத்தில் காணப்படும் பாத்திரங்கள் அவர்களின் பிற்கால நிலை குறித்தச்செய்திகளைக் கூறுவாதாக மணிமேகலை உருவாக்கப்பட்டது.காப்பிய மரபுப்படி நான்கு உறுதிப்பொருள்களைக் கொண்டதாகக் காப்பியங்கள் எழுதப்பட வேண்டும். சிலப்பதிகாரத்தில் அறம்,பொருள்,இன்பம் ஆகிய மூன்று பொருள்களும் வலியுறுத்தப்படுகின்றன.வீடுபேறு குறித்த கருத்துக்களை மணிமேகலை கூறுகின்றது.இதனை சிலப்பதிகாரத்தின் இறுதியில் நூற்கட்டுரை அமைந்துள்ள ...

“ஐந்திணை மருங்கின் அறம் பொருள் இன்பம் என்ற அடிகளில் சிலப்பதிகாரம் கூறும் மூன்று பொருள் குறித்தும் கூறுவதாக காணப்படுகிறது”

"மணிமேகலை மேல் உரைப்பொருள் முற்றிய

சிலப்பதிகாரம் முற்றும் " என்ற அடிகளின் வழி மணிமேகலை நான்காவது உறுதிப்பொருளான வீடுபேறு குறித்தக் காப்பியம் என்பது தெரிய வருகின்றது.எனவே சிலப்பதிகாரம் -மணிமேகலை ஆகிய இரண்டும் திட்டமிட்டு உருவாக்கப்பெற்ற இட்டைகாப்பியங்களாகும்.

**2.காப்பியம் என்பது உண்மை சம்பவங்களின் தொகுப்பா?அல்லது கற்பனையா?**

முழுவதும் கற்பனையாக அமைந்த காப்பியங்கள் காலங்கடந்து நிற்க இயலாது.உண்மை சம்பங்களின் தொகுப்பு என்றால் அது கட்டுரையாகிவிடும். காப்பியம் என்பது உண்மைச் சம்பவங்களின் அடிப்படையில் எழுதவேண்டும்.அனைவரின் மனங்கொள்ளுமாறு கூறுவதற்கு கற்பனை நயங்களைச் சேர்க்க வேண்டும். காப்பியம் என்பது கற்பனைகள் நிறைந்த உண்மைச்சம்பவம் எனலாம். தற்காலத் திரைப்படங்கள்,புதினங்கள் போன்றவைகளோடு ஒப்பிடலாம்.

**3. பெய் என்றால் மழை பெய்யும்" அளவிற்கு பெண்ணுக்கு கற்பு வலியுறுத்தப்பட காரணம் என்ன?**

கல் + பு = கற்பு = மனத்தின்மை .மனத்தின்மை என்பது தடுமாறும் மனநிலையில் இல்லாமல் தான் மேற்கொண்ட செயலைச் செய்கின்ற மனதின் உறுதித் தன்மையைக் குறிக்கின்ற குறியீடாகும்.

ஒரு பெண்ணிடம் இருக்கும் மனத்தின்மையால் சமூக ஒழுங்கும் கட்டுப்பாடும் இடையறாமல் இயங்கும்.

அடுத்துவரும் தலைமுறைகளான குழந்தைகளும் பெண்ணின் வழி உறுதி பெறுவதால் சமூகம் வளர்ச்சி நிலையை அடையும்.ஆதலால்தான் பெண்ணுக்கு கற்பு வலியுறுத்தப்பட்டது.

பின்னால் ஆணாதிக்கச் சமுதாயத்தில் தன்னுடைய பிள்ளைகளுக்கு தான் சேர்த்த செல்வமெல்லாம் சேர வேண்டும் என்ற நிலையில் கற்பு என்பது பெண்ணுக்கு மட்டும் என்று வலியுறுத்தப்பட்டது. பெண் மட்டுமல்ல ஆணும் “கற்பு” (மனத்தின்மை) உடையவராக இருந்தால் அவர்களாலும் மழை பெய்விக்க முடியும்.

**4.அமுதசுரபியை வைத்து பசிபோக்கும் அளவிற்கு மணிமேகலை காலம் வறுமையும்,வறட்சியும் இருந்த காலமா?**



மணிமேகலை காலம் வறுமையும்,வறட்சியும் நிறைந்த காலமல்ல.வளமையான காலம் தான்.இன்று வளமையான நாடுகள் என்று பட்டியலிடப்படும் நாடுகளிலும் வறுமையுற்றவர்களை காண முடிகின்றது. மணிமேகலை குருடர் ,செவிடர், முடம்பட்டோர் , பாதுகாப்போர் இல்லாதவர் ,ஊமையர் ,நோய்வாய்ப்பட்டோர் தவவேடங்களும்,விரதங்களும் உடையவர்,பசிநோய் அடைந்தவர் சோம்பலின் விளைவாக வறுமையை அடைந்தவர் ,பல்வேறு ஊர்களிலிருந்து பசியுடன் வந்தவர் ஆகியோர்களுக்கு உணவு வழங்கினார். இதை வறுமை ,வறட்சியால் வழங்கினார் என்று கொள்ள இயலாது.

**5.சக்கரவளாக்கோட்டம் என்ற பெயரில் , கடல் அருங்காட்சியகம் மணிமேகலை காலத்தில் இருந்தது உண்மைதானா?**

சக்கரவாளக்கோட்டம் ,சுடுகாட்டுப்பகுதிக்குள் அமைந்திருந்ததால் பொதுவாக அந்த இடம் சுடுகாட்டுக்கோட்டம் என்றழைக்க ப்பட்டது. பிணத்தை எரிப்பதற்காகவோ,புதைப்பதற்காகவோ,தாழியில் (மிகப்பெரியமண்பானையில் இறந்தவர்களின் உடலை வைத்து புதைப்பது தாழிஎனப்படுகிறது) அடைப்பதற்காகவோ மக்கள் செல்வர். சிலர் பிணங்களை பறவைகள்,விலங்குகள் ஆகியவற்றிற்கு உணவாகட்டும் என்று வீசி எறிந்து விட்டு வந்துவிடுவார்கள்.

அங்கு சக்கரவளாம் என்னும் அமைப்பு சதையால் செய்ப்பட்ட பாவைகளை ( பொம்மைகள்) உடைதாயிருந்தது.

“கடலினால் சுழப்பட்டுள்ள சக்கரவாளம் என்னும் மலைக்கு உட்பட்ட இடத்தில் நடுவில் மேருமலை,பக்கத்தில் எழுவகைக் குலமலைகள்,நான்கு வகைப்பட்ட பெரிதானத் தீவுகள்,இரண்டாயிரம் எனப்படும் சிறுசிறுதீவுகள் முதலியவற்றை அமைத்து அவ்விடங்களிலே வாழ்கின்ற உயிர்கள் என இவை அனைத்தும் மண்ணால் செய்யப்பட்டிருந்தன” - என்று மணிமேகலை காட்டுகின்றது,கடலில் வாழும் உயிரினங்கள் மட்டுமல்லாமல் மலைகள் தீவுகளில் வாழும் உயிரனங்களும் அமைக்கப்பட்டுருந்ததால் இதை கடல் அருங்காட்சியகம் என்று சொல்ல இயலாது. அப்போதிருந்த நில உலகின் மாதரிப்படிவம் எனலாம்.




**6.சிலப்பதிகாரமும் - மணிமேகலையும் மன்னராட்சிக்கு எதிரான காப்பியமா?**

சிலப்பதிகாரம் - மணிமேகலை இரண்டிலும் மன்னர்களுக்கு எதிரான நிகழ்வுகள் ஏதுமில்லை. மன்னர்கள் முதன்மைப்படுத்தப்படவில்லை என்பதற்காக மன்னர்களுக்கு எதிரானது என்று கூறமுடியாது. வணிகர்குல மக்களைத் தலைமையாகக்கொண்டு எழுந்த காப்பியங்கள் ஆகும். பின்னாளில் சாமானிய மக்களைப் பாட்டுடை த்தலைவராக கொண்டு

எழுதப்பட்ட சிற்றிலக்கியங்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தது எனலாம்.

## 7.மணிமேகலை பெண் அடிமைத்தனத்திற்கு எதிரான படைப்பா?

சுயமாகச்சிந்திக்காமல் சமூகக்கொள்கைகளைப் பின்பற்றுவதுதான் அடிமைத்தனம்.மணிமேகலை பெண் அடிமைத்தனத்திற்கு எதிரான படைப்பு தான். அடிமையாக வாழ்ந்த பெண் சமூகத்தைக் காட்டிய சாத்தனார், சுயமாகச் சிந்திக்கவும் செயல்படவும் கூடிய பாத்திரங்களாக மணிமேகலை,சுதமதி ,விசாகை முதியோரைப்படைத்துள்ளார்.

## 8.மணிபல்லவத்தீவு உள்ளிட்ட தீவுகள் மணிமேகலையில் குறிப்பிடப்படுகின்றன, அவை இன்றைக்கு இருக்கின்றனவா?

மணிபல்லவத்தீவு மனிதர்கள் வசிக்கின்ற இடமாகக் காட்டப்படவில்லை. ஆயினும் கடற்பயணம் மேற்கொள்வோர் தங்கி இளைப்பாறுகின்ற இடமாக இருந்ததனை அறியமுடிகின்றது. இலங்கையின் யாழ்பாணத்திற்கும், காவிரிப்பூம்பட்டினத்திற்கும் இடையே இத் தீவு இருந்திருக்கலாம். இப்போது அதன் நிலை தெரியவில்லை.

இரத்தினத்தீவு,அதிலுள்ள சமந்த மலை இரண்டும் மணிமேகலையில் பேசப்படுகின்றது.சமந்தமலை என்பது இலங்கையின் சிவனொளி பாதமலை என்கின்றனர் அறிஞர்கள்.அங்குள்ள புத்தபாதபீடிகை இன்றும் வணங்கப்படுவதாக உள்ளது. இலங்கையிலுள்ள இரத்தினபுரி நகரம் இரத்தினத்தீவாக இருந்திருக்கலாம்.சாவகம் என்றழைக்கப்படும் இடம் தற்போதுள்ள ஜாவாத்தீவுகள்.

## 9.அங்கிகரிக்கப்பட்ட பரத்தமை (பாலியல் தொழில்)இன்றைக்கு இருந்தால் பெண்களுக்கு எதிரான பாலியல் கொடுமைகள் குறையுமா?

அங்கீகரிக்கப்பட்ட பத்தமை இருந்த காலத்திலும்(சிலப்பதிகாரம் -மணிமேகலை) பெண்கள் தனித்துச் செல்ல முடியாத நிலை இருந்தது.தனித்துச்சென்ற (மணிமேகலையின் முக்கிய பெண்பாத்திரம் சுதமதி) சுதமதி ஒருவனால் கவர்ந்து செல்லப்பட்டாள். சிறிது நாட்களுக்கு பின் தனித்து விடப்பட்டாள்.தன் இடத்திற்கோ அல்லது தந்தையிடமோ செல்ல இயலாத நிலையில் சமணத்துறவியானாள். ககந்தன் என்ற மன்னனுக்கு இரு மகன்கள். ஒருவன் தனியாக வந்த முதிர்கன்னி ஒருத்தியிடம் தவறாக

நடக்கமுயன்றான். மற்றொரு மகன் தனியாக சென்ற திருமணமான பெண்ணிடம் தவறாக நடக்க முயன்றான்.இருமகன்களையும் கொன்று மன்னன் முறை செய்தான். பரத்தமை பாலியல் கொடுமைக்களுக்கு தீர்வல்ல.

## 10.அள்ள அள்ள குறையாத அமுதசுரபி என்ன ஆனது?இன்றைக்கு கிடைக்குமா?

பசித்தவர்களுக்கு உணவிடுதல் தமிழர்களின் சிறப்பு இயல்புகளில் ஒன்று. அதை வலியுறுத்த எண்ணிய சாத்தனார் அமுதசுரபியை படைத்தார். உணவிடுதலின் குறியீடுதான் அமுதசுரபி. பசித்து வருபவர்களின் பசியை நீக்க உணவைத் தருகின்ற அருள் நெஞ்சங்களே அமுதசுரபி. அள்ள அள்ளக் குறையாத உணவு பெருகுவது பசி என்று வந்தோர்க்கெல்லாம் உணவு படைக்கின்ற உள்ளம் வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காகத்தான்.

அமுதசுரபி என்பது சாத்தனாரின் காப்பியக்கற்பனை. பசி,பட்டினி ஆகியவற்றை நீக்கவேண்டும் என்பதற்காக படைக்கப்பட்டதுதான் அமுதசுரபி.என அறிஞர் சோ.நா.கந்தசாமி குறிப்பிடுகின்றார்.

பாரதிதாசன்,

கொடயுள்ளம் அமுதசுரபியாம்

பின் கொடுப்பவன்

அமுதசுரபி உடைவன் ஆனான்

என்ற கருத்தின்படி அமுதசுரபி வாழ்ந்து கொண்டிருக்கிறது.

நேர்காணல் அவரது ஆய்வின் சிறுபகுதி மட்டுமே.தமிழ் ஆர்வலர்களும், இலக்கிய ஆர்வலர்களும் முழுமையாக படிக்க வேண்டிய நூல். தமிழ்மொழியின் வளர்ச்சிக்கும், பழந்தமிழ் இலக்கியங்ளை பாதுகாக்கவும் இப்படியான ஆய்வுகள் ஆவசியமாகிறது. “சமூகவியல் நோக்கில் மணிமேகலை” ஒவ்வொரு தமிழரும் வாங்கி படிக்கவேண்டி நூலாகும்.

முனைவர் மலர்க்கொடி அவர்களை தொடர்பு கொள்ளவும் ,நூல்களை பெறவும் 8220699256,8903582121 என்ற எண்களில் தொடர்புகொள்ளுவும்.

முகவரி:

திருமதி மலர்க்கொடி

3/124 ஆத்மலிங்காநகர்

ஆலம்பட்டி போஸ்ட்

திருமங்கலம் தாலுகா

மதுரை மாவட்டம்.

# உலகின் முதல் பேரரசனும் விசித்திர சட்டங்களும்...

உலகின் முதல் விமானம்,முதல் டிவி,செல்போன் இப்படி முதன்முறை அப்பபடிங்கறது ரெம்ப விஷேசமான து. அதே மாதரி உலகின் முதல் பேரரசன் யார் ? எந்த நாட்டுக்கரார் .

ஏதோ டி.என்.பி.எஸ். கேள்வின்னு நெனக்க வேண்டாம். உலகத்தின் மிக பழமையான வரலாற்று விசயம். வரலாறு போராடிக்குமே ... இல்ல இது ரெம்ப சுவரஸ்யமான,வியப்புட்ட கூடிய வரலாறு.

உலகத்தின் முதல் நாகரிகம்,முதல் அரசன், முதல் பேரரசன், உலகின் முதல் சட்டங்கள் இப்படி பல ஆச்சர்யமான தகவல் இருக்கு.

இன்னைக்கு உலகத்துல ரெம்ப கொடூரமான இடமா,பாவப்பட்ட மனுசங்க வாழ்ற இடம் பாரசீக வளைகுடா பகுதி.எப்ப எங்க குண்டுவைப்பாங்களோ,தாக்குதல் நடத்துவாங்களோ அப்படின்னு பயப்பட வைக்கிற ஐ.எஸ்.தீவிரவாதிகள் தலைமை இடமாக இருக்கிற சிரியா,ஈராக் உள்ளடக்கியது பாரசீக வளைகுட பகுதி.தினம் தினம் அமெரிக்கா உள்ளிட்ட நாடுகள் நடத்துகிற போர் காரணமா 50 ,000க்கும் மேற்பட்ட தீவிரவாதிகள் கொல்லப்பட்டிருக்கிற இடம். பிழைக்க வழிஇல்லாமல் கடல்வழியா தப்பி போகும்போது பலியான லட்சக்கணக்கான மக்கள் ...இப்படி ரெம்ப கொடூரமான இடத்தில் தான் முதல் நாகரிகம் தொடங்கியது என்று சொன்னால் நம்ப முடியாது தான்.ஆனால் வரலாற்று ஆய்வாளர்கள் உறுதியாக இங்கு தான் என்கிறார்கள்.

**முதல் ஊரின் பெயரே ஊர்....!!!!**

துருக்கி துவங்கி சிரியா,ஈராக் வழியாக ஓடும் யூப்ரோடீஸ்,டைக்ரிஸ் என்ற உலகின் மிகப்பிரமாண்டமான நதிகள் பாரசீகவளைகுடா பகுதியில் இணைகின்றன. இந்த இரண்டு நதிகளுக்கும் இடைபட்ட பகுதியில் நதிகளின் கரையில் முதல் நாகரிகம் தோன்றியது. இங்குதான் மெஸபொடேமியா என்ற நாகரிகம் பாபிலோனியாவில் தோன்றியது.

2 லட்சம் வருடங்களுக்கு முன் தோன்றி மனிதர்கள் நடையாய் நடந்து அலுத்துபோனார்கள். விவசாயம். ஆடு,மாடுகளை மேய்க்க கற்றுக்கொண்ட பிறகு விவசாயம் செய்ய நல்ல தோதான இடங்களை தேடி அழைந்தார்கள். அப்போது

யூப்ரோடீஸ்,டைக்ரிஸ் நதிகளின் வளமையான வண்டல் மண் பிரதேசத்தில் நிரந்தரமாக தங்கி தங்கி சிறுசிறு குடியிருப்புகளை உருவாக்கினார்கள்.(இங்கு மட்டும்மல்ல உலகின் எல்லா இடத்திலும் இப்படித்தான் ஊர்கள் ,நகரங்கள் உருவாகின . வைகை நதிகரையை ஆதாரமாக கொண்டு பாண்டியர்கள் நகரங்களை உருவாக்கினார்கள்) அப்படி அவர்கள் உருவாக்கி முதல் ஊரின் பெயரே “ஊர்”என்று அழைக்கப்பட்டது. நாம் தமிழில் என்ன அர்த்தத்தில் சொல்லிகிறோமோ அதே அர்த்தத்தில் பாராசீக வளைகுடாவில் …ஆச்சர்யம் தான்.

**பாபிலோனிய நாகரிகமும் முதல் அரசனும்…**



முதல் ஊர் ஜனத்தொகை அதிகபட்சமா 500 பேர் இருப்பாங்க. அன்றைக்கு உலகின் ஒட்டுமொத்த ஜனத்தொகையே 1 கோடிபேர்.முதல் நகரம் தோன்றிய போது 5 கோடி உலக ஜனத்தொகை (தமிழகத்தின் ஜனதொகை இப்போ 6 கோடியை நெருக்கி விட்டது).கி.மு. 2000ல் 9 கோடிபேர் .இயேசு நாதர் பிறந்த போது 30

கோடி பேர் உலக முழுவதும் வாழந்தார்கள். இன்றைக்கு 600 கோடி அதற்கு மேலும் இருக்கலாம்.

பாபிலோனியாவில் ஊர்கள் சற்று பெரியதாகி நகரங்களாக மாறின. விவசாயம் செழிக்கத்தொடங்கயதும் மக்கள் தொகை பெருக தொடங்கி 50,000 பேர் கொண்ட நகரங்கள் அதிகமாயின. நகரத்திற்கு ஒரு தலைவன் உருவானான். நாட்டாமை,ஜமீன்தார், பஞ்சாயத்து தலைவர்கள் மாதிரியான தலைவர்கள். இவர்களுக்கு எல்லாம் தலைவனாக முதல் அரசனாக ஸார்கான் ஆட்சி செய்தான் .கிட்டத்தட்ட 55 (கி.மு. 2334 முதல் கி.மு. 2279 வரை) ஆண்டுகள்.இதே போல மேலும் பல நகரங்கள். அரசர்கள் உருவாக தொடங்கினார்கள்.

கிராமங்கள் நகரமாக உருவாக தொடங்கிய போது நாகரிகமும் வளர்த்தொடங்கியது. (அதென்ன நாகரிக வளர்ச்சி - லெண்ட லைன் போன் - செல்போனா மாறியது நாகரிக வளர்ச்சி தானே) பாபிலோனியர்கள் உலகிற்கு பல புதிய கண்டுபிடிப்புகளை வழங்கியிருக்கிறார்கள்.

பெரிய பாலம் கட்டும் போது ஒருபுறத்தில் துவங்கி மறுபுறத்தில் முடியவேண்டும். இடைபட்ட பகுதியில்பாலம் வளைந்து செல்ல வேண்டும். இதற்கு வளைந்த கட்டிடங்கள் கட்டும் தொழில்நுட்பம் வேண்டும். இன்றை இது சாதாரணமாக இருக்கலாம். ஆனால் இதை முதன்முதலில் கண்டுபிடித்தவர்கள் பாபிலோனியர்கள்.சக்கரம் கண்டிபிடித்தார்கள். போர் புரிய கூர்மையான ஈட்டிகள். போர் வீரர்களுக்கு யூனிபாம்கள். பல படிகளை கடந்து கடவுளை தரிசிக்க வேண்டும் என்ற அடிப்படையில் கோயில்கட்டிடகலையை உருவாக்கினார்கள்.இப்படி இன்னும் பல... சொல்லிக்கொண்டே போகலாம்.

**முதல் பேரரசனும்...சட்டங்களும்**



அரசர்களிலிருந்து பேரரசன் தோன்றுவது இயற்கையான நிகழ்வுதான். பாரசீக வளைகுடா பகுதியில் உருவாகி வந்த அரசர்களிலிருந்து பாபிலோனியாவில் பிறந்த (கி.மு 1792- 1750) ஹமுராபி பேரரசனாக மாறினான்.கி.மு.1792 ல் ஹமுராபி அவர் தந்தை, சின்-முபாளியட்டிடமிருந்து அதிகாரத்தை கைப்பற்றி பாபிலோன் நகரின் முதல் அமோரிட் வம்ச அரசரானார்.பக்கத்து நாடுகள் அவர்களுக்குள் ஒருவரை அடித்து கொண்டார்கள். அதை தனக்கு சாதகமாக பயன்படுத்திக் கொண்ட அவர் ஒன்றன் பின் ஒன்றாக நாடுகளை கைபற்றி கி.மு.1763 ல் மோசப்டோபிய சமவெளி முழுவதையும் தன் கட்டுப்பாட்டில் கொண்டு வந்தார். "ஜொலிக்கும் கனவுகளும், கற்பனை திறனும் ,கண்டிப்பும் கொண்ட தலைவனாக பேரரசனாக ஹமுராபி"திகழ்ந்தார். நாடுகளைகைப்பற்றியதால் மட்டுமல்ல அவர் உருவாக்கிய சட்டங்களே ஹமுராபியை ஆயிரம் ஆண்டுகளுக்கு பின்னும் அவரை நினைக்க வைக்கிறது.

1901ல் பாபிலோனிய பகுதியில் ஆய்வு செய்த ஜேக்கஸ் த மார்டின் என்பவர் 7 அடி நீளமுள்ள கல்வெட்டை கண்டுபிடித்தார். அதன் மேல்பகுயில் சட்டங்களை உருவாக்கும் ஹமுராபி சிலையும்,கீழ்பகுயில் சட்டங்களும் பொறிக்கப்பட்டுள்ளன. இப்போது பிரான்ஸில் உள்ள லூவர் மியூசியத்தில் இந்த கல்வெட்டு உள்ளது.

ஹமுராபி மறைந்து 1500 ஆண்டுகளுக்கு பிறகுதான் அலெக்சாண்டர், புத்தர்,சிசர்,இயேசு,அசோகர் சக்கரவர்த்தி பிறந்தார்கள்.

**கண்ணுக்கு கண்... பல்லுக்கு பல்..**

கொலை,கற்பழிப்பு போன்று கொடூரமான செய்திகளை செய்தியாக படிக்கும் போது... அவனையெல்லாம் நிக்கவைச்சு சுடனும்க,கண்ண தொண்டிவிடனும், அறுத்துவிட்டுரனும் இப்படி ஆத்திரத்தில் புலம்பியிருப்போம். இப்படி சாதாரண மக்களின் மனநிலையிலிருந்து ஆயிரக்கணக்கான சட்டங்களை ஹமுராபி உருவாக்கினா ர். அவற்றில் சில..

1. ஒருவரை நாம் அடித்தால் கூட அபராதம் உண்டு.

2. அடிக்கும்போது பல் உடைந்துபோனால் ,அடித்தவருக்கு பல் உடைக்கப்படும்.

3.கடத்தல்,கற்பழிப்பு,குழந்தையோடு உடலுறவு கொள்ளுதல், வழிப்பறிகொள்ளை, லஞ்சம் ,போர்களத்திலுருந்து தப்பி ஓடுதல்,திருட்டு,இவற்றிக்கெல்லாம் ஒரே தண்டனை மரணம். (இந்தியாவுல பாதிபேரு செத்தானுங்க)

4.பாலிலோனியர்கள் பீர் விரும்பி குடிப்பார்களாம்...பீர் தரமற்றதாகவோ,கலப்படம் செய்தோ இருந்தால் தூக்குதண்டனை. (குடிமகன்களுக்குதேவையான சட்டம்)

5.ஆப்ரேசன் செய்து நோயாளி பாதிக்கப்பட்டாலோ,இறந்து போனாலோ டாக்டரின் கைவிரல்கள் வெட்டப்படும். (சூப்பர் சட்டம்). அந்த காலத்திலேயே கண் மருத்துவமனை பாபிலோனியாவில் இருந்ததாம்.

6.தொழிலாளிக்கு எவ்வளவு சம்பளம்,லீவு எத்தனை நாளைக்கு .ஆஸ்பத்திரியில் பணக்காரர்களுக்கு எவ்வளவு பீஸ்,எழைகளுக்கு எவ்வளவு பீஸ் வாங்க வேண்டும் என்பது உட்பட சட்டம் எழுதினார் ஹமுராபி.



7.இருப்பதிலேயே எனக்கு பிடித்தமான ஆச்சர்யமான சட்டம்... ஒருவீட்டில் கொள்ளை போகிறது. குறிப்பிட்ட நாளுக்குள் திருட்டர்களை போலீஸால் கண்டுபிடிக்கமுடியாவிட்டால் போலீஸ்காரர் வேலை நீக்கம் செய்யப்படுவார்.மேலும் எவ்வளவு திருடு போனதோ அந்த தொகையை அரசாங்கம் பாதிக்கப்பட்டவர்களுக்கு கொடுக்கவேண்டும்.உலகத்தின் பேரரசன் எப்படியெல்லாம் சட்டம் போட்டுருக்கார் பார்த்திங்களா? இன்னை க்கு இப்படி சட்டம் போட முடியுமா?

# பட்டாணிச்செடியும்... இந்திய சினிமாவின் பயணப்பாதையும்...




தனது வீட்டு பின்புறத்தில் பட்டாணி விதையை நட்டு வைத்தான் ஒரு இளைஞன்.பட்டாணி விதை மண்ணை துளைத்துக் கொண்டு வளரத்துவங்கியது. இளைஞன் படமெடுத்து கொண்டான். அடுத்த நாள் சற்று பசுமையான தண்டுகளை கொண்டு வெளிவர அதனையும் படமெடுத்து கொண்டான். பட்டாணிச்செடி முழுமையான செடியாக மாறும் வரை படம் மெடுத்துக்கொண்டான். எடுக்கப்பட்ட புகைப்படங்களை கொண்டு ''பட்டாணிச்செடியின் பிறப்பு'' என்ற இந்தியாவின் முதல் ஆவணபடம்(1912) தயாரானது. படம் மெடுத்த அந்த இளைஞன் தான் இந்தியாவின் முதல் சினிமாவை உருவாக்கிய தாதாசகோப் பால்கே.



பொய்யே பேசத அரசனின் கதை….

நாடகம், நடனம், பாட்டு, இசை, நாட்டார்கூத்து போன்ற கலைகளின் தாயகமாக விளங்கிய இந்தியாவில் இவற்றையெல்லாம் தனதாக்கிக் கொண்டு இந்திய சினிமா வளர்ச்சியடை தொடங்கி 100 ஆண்டுகள் ஆகிவிட்டது. 1913ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 21ஆம் நாள் பம்பாய் காரனேஷன் சினிமா திரையரங்கில் ''ராஜாஹரிச்சந்திரா'' வெளியானது. ''பொய்யே பேசத அரசனின் கதை''யை பேசாப்படம் மூலமாக எடுத்திருந்தார் இந்திய சினிமாவின் பிதாமகர் தாதாசாகேப் பால்கே. வெள்ளைத்திரையில் புகைப்படம் அசைவதை,ஓடி,ஆடி நடிப்பதை, தங்களைப்போலவே எல்லாவிதத்திலும் சலனிப்பதை முதன் முதலாக பார்த்த மக்கள் அதிசயத்து போயினர்.பெரும் திரளாக கூடி படத்தின் வெளியீட்டு நிகழ்வையே ஒரு திருவிழா போல ஆக்கிவிட்டனர்.



இந்திய சினிமாவின் துவக்கம் குறித்து மாறுபட்ட கருத்துக்களும் இருக்கின்றன.1912ம் ஆண்டு மே மாதம் 18ம் தேதி , ராஜாஹரிச்சந்திரா வெளிவருவதற்கு ஓராண்டு முன்பாக ''பாண்டாலிக்'' என்ற 22 நிமிடம்,1500 அடிகள் கொண்ட மௌனத்திரைபடம் தான் முதல் சினிமா என்கிறார்கள்.இந்த படமும் அதே காரனேசன் திரையங்கில் தான் வெளியிடப்பட்டது. இதற்கு முதல் படதகுதியை வழங்க முடியாது என்கிறார்கள் சிலர் . இது சினிமாவே அல்ல,ஒரு மாராத்தி நாடகத்தின் புகைப்பட தொகுப்புதான் என்கிறார்கள்.

**கதாநாயகன் தெலுங்கு,நாயகி தமிழ் பேசிய படம்**

எப்படி அரசியல்,பூலோக தன்மையில் வடக்கு, தெற்கு என்று மாறுபாடு இருக்கிறதோ அதே போல இந்திய சினிமாவில் இந்தி சினிமாவுக்கு நிகராக தென்னிந்தியாவில் சினிமா வளச்சியடை துவங்கியது. இந்திய சினிமாவில் முக்கியபங்காற்றி வருகிற தமிழ்சினிமாவுக்கு 1897 களிலேயே, அதாவது பால்கேயின் படம் வெளிவருவதற்கு முன்னதாகவே எட்வர்ட் என்பவர் மூலமாக சினிமா கலை குறித்த அறிமுகம் கிடைத்திருந்தது.தென்னந்தியாவின் முதல் தியேட்டர் கெயிட்டியை சென்னையில் வெங்கையா என்பவர் கட்டினார்.தென்னிந்தியாவின் முதல் மௌனப்படம் ''கீசகவதம்'' வேலூர் நடராஜ முதலியார், தர்மலிங்க முதலியார் தாயாரிப்பில் வெளிவந்தது. 1930 ம் ஆண்டு ஹர்தேஷ் இராணி என்பவர் ''ஆலம் ஆரா'' என்ற பெயரில் இந்தியாவின் முதல் பேசும் படத்தை தயாரித்தார்.




அவரே 1931 ம் ஆண்டு தமிழில் ''காளிதாஸ்'' என்ற படத்தை தயாரித்தார். இந்த படத்தில் கதாநாயகன் தெலுங்கிலும், கதாநாயகி தமிழிலும், சில கதாபாத்திரங்கள் ஹிந்தியிலும் பேசினார்கள். இந்த படத்தை தான் தமிழ் சினிமா தனது தொடக்க கால சினிமாவாக பாவித்துக்கொண்டது.

**இந்திய சினிமா பயணப்பாதையில் சில....**

உலக சினிமா எதையெல்லாம் சாதிக்கிறதோ அதையெல்லாம் நாமும் காலம் தாழ்த்தாமல் தமதாக்கி கொண்டிருக்கிறோம்.மௌனப்படம்,ஒலிப்படம், வண்ணப்படம்,சினிமாஸ்கோப்,ஸ்டிரியோ போனிக் ஒலி, 3டி,டிஜிடல் எல்லாவற்றையும் நமது சினிமா பாணிக்கு கேற்ப மாற்றி பயன்படுத்தி கொண்டிருக்கிறோம். அதிகப்படங்களை தயாரிப்பதில் உலகின் முதலிடத்தை பிடித்திருப்பது இந்திய சினிமாதான். எல்லா இந்திய மொழிகளிலுமாக சேர்த்து வருடத்திற்கு 1000 க்கு மேற்பட்ட படங்கள் வெளிவருகின்றன. அதிகமாக பணம் புழங்குகிற மிகப்பெரிய வியாபாரமாக மாறியிருக்கிறது. இந்திய கலாச்சாரத்தை பிரதிபலிக்கிற மிகமுக்கிய அடையாளமாக இத்திய சினிமா பரிணமித்திருக்கிறது.



100 ஆண்டுகளுக்கு முன் பால்கே தொடங்கி வைத்த பயணம் இன்று மிகப்பிரமாண்டமாக வளர்ந்துள்ளது. இன்று இந்திய சினிமா அதிக படங்களை தயாரிப்பது மட்டுமல்ல உலகளாவிய கவனத்தை ஈர்க்கும் இயக்குனர்களை கொண்டுள்ளது. சத்யஜித்ரே,மிருணாள்சென்,ரித்விக் கட்டாக், கிரஷ்காசரவல்லி, சியாம்பெனகல், அடுர்கோபாலகிருஷ்ணன், ஜி.அரவிந்தன், தமிழகத்தை சேர்ந்த மணிரத்னம் போன்றவகளின் மாறுபட்ட பங்களிப்பினால் இந்திய சினிமா தொட்டிருக்கும் உயரங்கள் அதிகம். உலகின் 100 சிறந்த திரைப்படங்களில் கமல்ஹாசனின் நடித்து, மணிரத்னம் இயக்கிய படம் இடம்பிடித்துள்ளது. மேலும்

உலகின் 25 விளையாட்டு திரைப்படங்களில் அமீர்கான் நடித்த லகான் இருப்பது இந்திய சினிமா தொட்ட சிகரங்களில் சில.இசைக்காக ரகுமான் பெற்ற ஆஸ்கார் விருதுகள்....

**சினிமா வெறும் பொழுதுபோக்கு மட்டும் தானா?....**



சினிமா பற்றிய இருவேறுபட்ட கருத்துக்கள் உள்ளன.சினிமா ஒரு பாவகாரமான தொழில் நுட்பம் என்கிறார் காந்தி. ஐந்து பாவங்கங்களில் ஒன்று என்கிறார் பெரியார். சினிமாவை வெறும் பொழுது போக்கு அம்சாமாக மட்டுமே கையாளுகிறோம், நல்ல கலைவடிவமாக, கருத்து ஊடகமாக பயன்படுத்துவதில்லை என இந்திய சினிமா பற்றி குற்றச்சாட்டு உண்டு . இதில் உண்மை இல்லாமல் இல்லை தனிமனித துதிபாடல்,வன்முறைகள், மனிதநேயம் மற்ற போக்கு , தவறான மனித தொடர்புகள், மதம்,சாதிய போற்றுதல்கள், தவறான அரசியல் வழிகாட்டுதல்கள், என ஆபத்தம் நிறைந்ததாகவே பெரும்பாலன சினிமாக்கள் வந்து கொண்டிருக்கின்றன. இந்த போக்கில் நிறைய மாற்றங்களும் தெரிய துவங்கியிருப்பதையும் பார்க்கலாம். அங்காடித்தெரு, ஆரவான்,பரதேசி, வழக்கு எண்18/9 போன்ற சினிமாக்களும், இயக்குனர்களும் நம்பிக்கையளிப்பவை.

இரான்நாட்டின் இயக்குனர் ஜபார்பனாகி, கல்வி உரிமை,பெண்களுக்கு எதிரான பிற்போக்குதனத்திற்கு சினிமா எடுத்ததால் 6ஆண்டு சிறை,20 வருடங்களுக்கு சினிமா எடுக்க தடை விதிக்கப்பட்டிருக்கிறது. சினிமாவை வெறும் பொழுது போக்கு சாதனம் என என்று புறந்தள்ளிவிட முடியாது. மக்களிடம் கருத்துக்களை விரைவாக பரப்புகிற ஊடகம், அதை சரியாக பயன்படுத்த வேண்டியது நல்ல இயக்குனரின் பணி. சினிமா வேறும் பொழுபோக்கு சாதனமாக மட்டும் பயன்படுத்தாமல் சமூக மாற்றத்திற்கான கருவியாக பயன்படுத்தி சினிமா தனது பயணத்தை தொடர வாழ்த்துவோம்.-

# FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை

“Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்

3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

**துவக்கம்**

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை "Creative Commons" உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

**முடிவு**

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை http://kaniyam.com/foundation

**கணியம் அறக்கட்டளை**




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

## பணி இலக்கு – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

### தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

### கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

### அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்

- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

## நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**
**Account Number : 606 1010 100 502 79**
**Union Bank Of India**
**West Tambaram, Chennai**
**IFSC – UBIN0560618**
**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**




BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.